# சித்தார்த்தனும் அன்ன பறவையும்

ஆன்ரூ பியூசேக் பீட்டர்ஸ்

தமிழில் கிருஷ்ணன்



வசந்த காலத்தில் ஒரு மாலை பொழுதில் இளவரசன் சித்தார்த்தன் அரண்மனைக்கு அருகே இருக்கும் ஏரிக்கரையில் நடந்து கொண்டிருந்தான். அப்போது தண்ணீரில் ஒரு விசித்திரமான சலசலப்பு கேட்டது.



இளவரசன் வானத்தில் அன்னாந்து பார்த்த போது மூன்று அன்ன பறவைகள்  பறந்து கொண்டிருந்தது. அதை பார்த்த அவன் மனம் நெகிழ்ந்து போனான்.

திடீரென்று ஒரு அன்ன பறவை மட்டும் க்ரீச்.. என்று பயங்கரமான சத்தம் போட்டது. அதனுடைய சிறகு அடிக்காமல் கீழே விழ தொடங்கியது.

பாவம் அந்த அன்னம் தரையை நோக்கி விழுந்தது. யாரோ அதன் மீது அம்பு எய்திருக்கிறார்கள்!

விழுந்த பறவையை நோக்கி இளவரசன் ஓடினான்.

புல் வெளியில் விழுந்த அன்னம் வலியோடு கத்தி கொண்டிருந்தது. அதனுடைய தோளில் ஒரு அம்பு சொருகி இருந்தது.

இந்த அழகான அன்னத்தின் மேல் யார் அம்பு எய்திரிப்பார்கள்? அவன் அதை எண்ணி துயரம் அடைந்தான். ஆனால் அவனால் என்ன செய்ய முடியும்?



இளவரசன் சித்தார்த்தன் கீழே அமர்ந்து அன்னத்தின் மிருதுவான இறகை தடவி கொடுத்தான்.



“நானும் உன்னை போல முன் ஜென்மத்தில் அன்னமாக தான் இருந்தேன்”. என்று ஆறுதல் கூறினான் சித்தார்த்தன்.

“பயப்படாதே உனக்கு உதவி செய்யவே நான் இங்கு இருக்கிறேன்.” என்று கூறினான். அன்னமும் அமைதி அடைந்தது.



இளவரசன் மெல்ல அந்த அம்பை அதன் உடம்பிலிருந்து வெளியே எடுத்தான். பின்னர் அது வெப்பமாக இருப்பதற்காக அவன் ஆடையை அதன் மீது போர்த்தினான்.

எங்கே அது? என்று ஒரு குரல் கேட்டது. அது சித்தார்த்தனின் உறவினன் தேவதத்தன். அவன் ஒரு பெரிய அம்பை ஏந்தி கொண்டு வந்தான்.

“சபாஷ் தம்பி. என்னுடைய அன்னத்தை கண்டுபிடித்து விட்டாயே!” என்றான் தேவதத்தன்.

“இது உன்னுடைய அன்னம் கிடையாது. இது காட்டில் வாழ்வது. அந்த ஆகாயத்திற்கு சொந்தமானது.”





“ஆனால் நான் தான் அம்பை எய்தவன். அதனால் எனக்கு தான் இது சொந்தமானது. அது தான் சட்டம்.” என்றான் தேவதத்தன்.



“அது சட்டமாக வேண்டுமானால் இருக்கலாம். ஆனால் இந்த அன்னம் உயிரோடு தான் இருக்கிறது. நான் அது குணம் அடைவதற்கு உதவ போகிறேன்” என்றான் சித்தார்த்தன்.

“அவன் உறவினனுக்கு கோபம் வந்துவிட்டது. இதை போல முட்டாள் தனமான பேச்சை நான் கேட்டதில்லை” என்றான் தேவதத்தன்.





“சரி அப்படியானால் நாம் ராஜாவிடமும் அவரின் மந்திரிகளிடமும் கேட்டுவிடலாமே?” என்று பொறுமையாக கூறினான் சித்தார்த்தன். “எது நியாயம்” என்று அவர்கள் கூறட்டும் என்றான்.



சபையில் ஒரு பெரிய  விவாதம் நடந்தது.

“ஒரு பறவையை அம்பால் நான் கொன்றேன் என்றால் அது எனக்கே சொந்தம்” என்றான் தேவதத்தன்.
“ஆம் உண்மை தான்” என்றார் அமைச்சர்.



“அந்த பறவை இறந்தால் தானே! இந்த அன்னமோ உயிருடன் தானே இருக்கிறது.” என்றான் சித்தார்த்தன்.
இப்போது யாருக்குமே என்ன சொல்வதென்று தெரியவில்லை.

திடீரென்று ஒரு முதியவர் கதவில் வந்து நின்றார்.

“அன்னமிடமே நாம் இதை கேட்டால் என்ன?” என்றார் முதியவர்.
அன்னம் “தான் குணம் அடைய வேண்டும்” என்று தான் கூறும். “உலகில் யாருமே சாவும், வலியும் வேண்டுமென்று கூற மாட்டார்கள். யார் அதை குணப்படுத்துவார்களோ அவர்களிடமே போக விருப்பம் கூறும்.” என்றார் முதியவர்.





“ஆம் நல்ல அறிவுரை! அப்படியே ஆகட்டும். இரண்டு பேருமே அன்னம் குணமடைய உதவட்டும்.” என்றார் ராஜா.



பறவைகளும் வலியுணரும் என்பதை விரைவில் தேவதத்தன் உணர்ந்து கொண்டான். அன்னம் குணமடைய சிதார்த்தனுக்கு உதவினான். சீக்கிரமே அன்னம் குணமடைந்தது.





ஒரு மாலை பொழுதில் அரண்மைக்கு அருகே இருக்கும் ஏரிக்கரையில் நடந்து கொண்டிருந்தார்கள் சித்தார்த்தனும், தேவதத்தனும் அப்போது ஒரு விசித்திரமான சலசலப்பு கேட்டது.

"வானத்தில் பாரு!" என்று கூறினான் தேவதத்தன். மற்ற அன்ன பறவைகள் அடிபட்ட அன்னத்தை தேடி வந்திருந்தின.

காயத்திலிருந்து அடிபட்ட அன்னம் பறப்பதற்கு தன் சிறகுகளை அடிக்க தொடங்கியது.

மெதுவாக மெதுவாக அது காற்றில் மேலெழுந்து மாலை பொழுது வானில் பறந்து சென்றது.

சித்தார்த்தனும், தேவதத்தனும் அந்த அன்னம் தூரம் உள்ள மலைகளுக்கு மேல் பறந்து செல்வதை கண் இமைக்காமல் பார்த்து கொண்டிருந்தனர்.



சில ஆண்டுகளுக்கு பின்னர் அந்த இளவரசன் தான் புத்தராக மாறினான்.
புத்தர்  மற்ற உயிர்களிடம் மனிதன் கருணை கொண்டிருக்க வேண்டும் என்பதையே தன் வாழ்நாள் முழுவதும் கற்பித்தார்.

